உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவானந்த லஹரி

✱

ஸ்ரீமத் சங்கராச்சாரியார்

அருளிச்செய்தது

✱

சௌமிய ஆண்டு 1969

✱

தமிழாக்கம் :

கோவை - கவியரசு,

வித்துவான்

கு. நடேசக் கவுண்டர், P. O. L.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அணிந்துரை.

**திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள்,**

[ தனித் தாசில்தார் (அபிவிருத்தி) பல்லடம், கோவை மாவட்டம் ]

" காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித்ததும்பிப்பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ இன்புற்றிடநாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் செகத்தீரே "

—**ஸ்ரீ தாயுமான சுவாமிகள்.**

இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை வரம்பிலின்பமுடைமை எனுமிவை இறைவனின் எண் குணங்களுள் எண்ணப்பெறுவன. இயல்பாகவே பாசங்களுட்பிணிப்புற்று, வரம்பில் துன்பத்துள் வாடும் உயிர்களை அப்பாசங்களினின்றும் விடுவித்து வரம்பில் இன்பம் துய்ப்பிக்க இறைவன் விரும்புகின்றான். இஃது அவனுடைய பேரருளுடைமை எனுங்குணத்தால் நிகழ்வதாகும். இம்முயற்சியில் உயிர்கள் ஈடுபடும்பொருட்டு இறைவன் அவற்றுக்குத் தநுகரணபுவனபோகங்களை அருளுகின்றான். அவற்றைக் கருவிகளாகக் கொண்டு உயிர்கள் முயல்வதன்மூலம் வினைகளைச் செய்து அவற்றின் பயன்களைத் துய்ப்பதால் மலம் நீங்கிப் பக்குவமெய்தி முடிவில் தம் குறிக்கோளான இறைவன் திருவடிகளை எய்தி மாறிலாப் பேரின்பம் நுகர்கின்றன. இதுவே ஆன்மாக்களின் சரிதச் சுருக்கமாம்.

இவ்வாறு ஆன்மாக்கள் மேற்கொள்ளும் வாழ்க்கைச் செலவில் நேரிய வழியிற் சென்று குறிக்கோளை எய்துவன சிலவாகவும், வழிதவறி அல்லலுறுவன பலவாகவும் இருக்கக் காண்கின்றோம். இங்ஙனம் வழிதவறும் உயிர்களும் செந்நெறியிற் படர இறைவன் பரிந்து அவற்றிற்குச் சிறப்பருள் புரிகின்றான். இவ்வருளினால் உயிர்கள் எய்தும் இன்பமே பெருவெள்ளமாகப் பொங்குகின்றது. அதனைத்

துய்த்து மகிழ்ந்து உய்திபெற்ற பேரருளாளர்கள் தம் மகிழ்ச்சியின் மிகுதியாலும், உலகரும் அவ்வாறே அதனைத் துய்த்து இன்புற்றுய்ய அவர்களை ஆற்றுப்படுத்தவும், அவ்விறையின்பப் பெருக்கால் தாம்பெற்ற அனுபவங்களை நூல்களாக யாத்து உபகரித்துள்ளனர். அவற்றுள் ஒன்றே ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிச் செய்த "**சிவானந்த லகரி**" என்னும் இவ்வரிய நூலாகும்.

இப்பரத கண்டத்தில் காஷ்மீரம் முதல் குமரிமுனை வரையும் பூதிசாதனங்கொண்டு சிவவழிபாட்டினை ஏற்றுளோர் மிகப்பலர். அவர்கள் அனைவரும் சைவர்களே எனப் படுவர். சைவ சமயத்தின் பாகுபாடுகளும், அவற்றிற்கு மூலமான சாத்திரங்களும் தம்முட் சிறிது சிறிது வேறு பாடுடைய வாயினும், 'சிவனே முழுமுதற் பொருள்; திருநீறு, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து – இவையே சைவ சாதனங்கள்" என்பதில் சிறிதும் மாறுபாடுடைய வல்ல. ஒன்றற்கொன்று கொள்கையால் வேறுபட்ட சைவ சமய சாத்திரங்கள் அனைத்தும் சிவபெருமானுடைய திரு வருளைப்பெறுதலே குறிக்கோளாக உடையன. ஆதலால் சைவ சிந்தாந்திகளும், வேதாந்திகளும், வேறுபல சைவப் பிரிவினரும் இந்நூற்கருத்தை முழுவதுமாக விரும்பி ஏற்பர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. சமய வாதங்களி லெல்லாம் அறிவின் கூர்மை மிளிர்வதைக் கண்டு விம்மித முடையலாம்; ஆனல் சொல்லும் மனமும் கடந்து நிற்கும் இறைவனை வெறும் சொற்களாலான சாத்திரங்கள் முழு மையாகப் பிணிக்கும் ஆற்றலுடையனவல்ல. அத்துணை அரிய இறைவன் பத்தியினற் பரவுவார்க்கு எளியனுகின் ருன். அந்நிலையிற் பல்வேறு சமயிகள் நுகரும் இன் பானுபவங்கள் யாவும் ஓரே பாங்கினவாயுள்ளன. இவ்வரிய நூல் முழுவதும் சைவத் தெய்வத் திருமுறை களிலும், அவற்றுள் தோய்ந்து பெருநலம் பெற்ற பெரு மக்களால் அருளிச் செய்யப் பெற்ற ஏனைய இலக்கியங் களிலும் காணப்படும் கருத்துக்களே விரவிநிற்கின்றன. எடுத்துக்காட்டாகச் சில காண்போம்.

"இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்னும் திருக்குறளின் கருத்தைக் கூறும் இரண்டாம் திருப்பாடலில் வரும் உருவகம், "அமண் மாசுகழுவுதற்கு மன்னியொளிர் வெண்மையினுல் வழுதியர்தம் கன்னிநாட் டிடைக் கங்கை அணைந்ததெனும் கவின்காட்ட" எனும் சேக்கிழார் பெருமானின் உருவகத்தை ஒத்துள்ளது. அவ்வாறே "எளிமையை என்தலைமேல் தீட்டிய நான் முகன் நெடுநாள் வாழ்க" எனக்கூறும் பதினைந்தாம் திருப்பாடல் "அமண் குழியில் வீழ்ந்து அவம் புரிந்த என்னைச் சிவன்கழல் சேர்த்த சூலை நோய்க்கு என்ன கைம்மாறு செய்வேன்?"என்றகருத்தமைத்து, அரசுகள்கூற் ருகச் சேக்கிழார் பெருமான் அருளிய திருவாக்கை நினை வூட்டுகின்றது. பதினேழாம் திருப்பாட்டின் முதலிரண் டடிகள், "இயங்குகின்ற இரவிதிங்கள்" எனும் ஆளுடைய பிள்ளையார் திருக்கடைக் காப்பினையும், பத்தாம் திருப் பாடல், "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி யென்மனத்தே, வழுவாதிருக்க வரந்தரவேண்டும்" எனும் அரசுகள் தேவாரத்தையும் நினைப்பிப்பன. முப்பத் தொன்பதாம் பாடல் "மெய்ம்மையாம் உழவைச் செய்து" எனும் அரசுகள் தேவாரத்தை எண்ணச் செய்கின்றது. 4, 22, 34, 63, 75-ஆம் பாடல்கள்

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு"
"வேண்டத் தக்க தறிவோய் நீ"
"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை"
"உற்றாரை யான்வேண்டேன்"

எனவரும் திருவாசகப் பாடல்களின் வேற்றுருவங்களாம்.

பன்னிரண்டாந் திருப்பாடல் "காடே திரிந்தென்ன" என்ற பட்டினத்தடிகள் பாடலையும், முப்பத்தைந்தாம் திருப்பாடல் "கருப்புகுற் ருெடங்கிப் பெருநா ளெல்லாம்" எனும் திருக்கழுமல மும்மணிக் கோவைப் பாடலையும் நினைக்கச்செய்வன. இறைவனைக் கள்வன் என்ற பொருளில் "ஸ்தேநாநாம் பதி" எனவும், "தஸ்கராணும் பதி" எனவும் வேதம் கூறும். "உள்ளம்கவர் கள்வன்" என்பது ஆளுடைய பிள்ளையாரின் அமுதவாக்கு. இதனை இருபத்தோராம் பாடலில் கண்டுகளிக்கலாம். நூல் முழுவதும் விரவிக் கிடக்கும் சிலேடை, உருவகம், வின்

ணப்பச் சாதுரியம் ஆகியவை ஆழ்ந்தாழ்ந்து பயின்று இன்புறும் நயம் மிகுந்தவை.

முடிவாக நோக்குமிடத்து, மக்கள் யாவரும் சிவபூசை செய்து உய்திபெறுவதொன்றே வாழ்க்கையின் குறிக்கோளாகும், ஆனால் அப்பெருமானுடைய பெருமைக்குத்தக்க சாதனங்களைத்தேடிப் பூசை முயலுதல்யார்க்கும் இயலாது. அயன்மாலுள்ளிட்ட மிகப்பெரிய தேவர்களும் அவனைத் தேடும் முயற்சியிலுங்கூடத் தோல்வியுற்றொழிந்தனர். அவன் விரும்புவன பொக்கமிக்கவர் பூவும் நீருமல்ல, பொன், சிந்தாமணி முதலிய அரிய பொருள்களெல்லாம் அவன் கோயில் வாயிலிற் கிடப்பன. அவனிடமில்லாததும், அவன் விரும்பிக் கேட்பதும், நம்மிடமுள்ளதும், நமக்கு வேண்டாததுமான ஒரே பொருளை அப்பூசையில் அவனடியிற் சாத்தினாற்போதும்; அவனுக்குச் சாத்தற்குரிய அப்பொருள் யாதெனின் நமது நெஞ்சமே என்று உலகரை ஆற்றுப்படுத்தும் 26-ஆம் பாடல் கன்னெஞ்சையும் கரையச்செய்யும் ஆற்றலுடையது. 7, 29, 79, 86, 88, 94-ஆம் திருப்பாடல்களை நாம் கலந்து பாடுங்கால் சமயவாதங்கள், சாத்திரச்சண்டைகள் எல்லாம் நமக்குப் பின்னே நெடுந்தொலைவில் நிற்க நாவினிக்க மனமினிக்க நம்மை மறந்து நிற்கின்றோம். பத்தியின் பலவகைநிலைகளைப் பலவகை உதாரணங்களால் படிப்படியாக விளக்கிக் கூறும் “அங்கோல மரத்தை” எனத்தொடங்கும் 61-ஆம் பாடல் ஒப்புயர்வற்றதாய்க் கற்போர் உள்ளத்து நீங்காத இடம் பெற்று விடுகின்றது. சுருங்கக்கூறின், இந்நூல் முழுதும் சிவானந்தப் பெருவெள்ளமே கங்குகரைகாணாமல் விரிந்து பரந்து பேரின்ப அலைவீசி நம்மை மேலும் மேலும் ஆழத்தில் ஈர்த்து ஈர்த்து அழுத்துகின்றது. தமிழ்ச் சைவ உலகம் முழுதும் இதில் ஆழ்ந்து திளைப்பதாக.

இத்துணை அரிய நூலைக் கோவை கவியரசு வித்துவான் கு. நடேச கவுண்டர். P. O. L. அவர்கள் வடமொழியினின்றும் செய்யுள் வடிவில் மூலபாடக்கருத்துச் சிறிதும் பிறழ்வின்றித் தமிழில் மொழிபெயர்த்து அமைத்துள்ளார்கள். இதனை ஓதுங்கால் மொழிபெயர்ப்பு என்ற நினைவின்றி முதல்நூலே என எண்ணத்தோன்றுகின்றது. பாடல்கள்

அழகும், தெளிவும், ஆழமும் கொண்டு புலமைச்செறிவுடன் கவியரசு அவர்களுக்கே உரிய கம்பீரமான நடையில் தங்கு தடையின்றிச் செல்கின்றன.

இவ்வரிய நூலின் பெருமையையும் அவசியத்தையும் அறிந்த கோவை–காந்திபுரம் "பத்மாலயா நிதி" யின் அதிபரும் சிவபூசா துரந்தரரும், எனது இனிய நண்பருமான திரு. K சென்னியப்ப கவுண்டர் அவர்கள் இதனை அச்சேற்றித் தமது அருமை மைந்தன் செல்வன் C. பாலசுப்பிரமணியத்தின் பிறந்த நாளும், தமிழ்ப் புத்தாண்டு நாளுமாகிய சௌமிய ஆண்டு முதல் நாளில், கோயம்புத்தூரை அடுத்த மருதமலையில் முருகப் பெருமானுக்கு மகாபிடேகமும் சிறப்புவழிபாடுமாற்றி, மகேசுர பூசை அன்னம்பாலிப்புக்களுடன் வெளியிடுகின்றார்கள். சென்ற ஆண்டுகளிலும் இவ்வாறே இந்நூலாசிரியர் மொழிபெயர்த்த "சிவகேசாதிபாத வருணனைஸ்தோத்திரம்", "தசஸ்லோகிஸ்துதி", "சிவ மஹிம்ந ஸ்தோத்திரம்" ஆகிய அரிய நூல்களை வெளியிட்டுதவினார்கள். இத்தகைய சிறப்பு நாட்களில் சில நாழிகைப் பொழுதில் பொருளற்ற ஆடல் பாடல்களில் பொருளை வீணாக்கித் தானும் வீணாகும் உலகம் இத்தகைய சிவபுண்ணியங்களில் ஈடுபடலே நிலையான நலன் பெறுதற்கு ஏதுவாகும். இதற்கு வழி காட்டிவரும் இவ்விரு பெருமக்களுக்கும் சைவ உலகம் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது. இவர்களுக்கும், செல்வன் பாலசுப்பிரமணியத்திற்கும் எல்லா நலன்களையும் அருள அங்கயற்கண்ணிபங்களுன ஆலவாய் அவிர்சடை அண்ணலின் பாதம் போற்றிப் பணிகின்றேன்.

"சேக்கிழார் நிலையம்"
371, வைசியாள் வீதி,
கோயம்புத்தூர் – 1
21—3—1969

இங்ஙனம்,

சி. சு. கண்ணுயிரம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

இந்நூலாசிரியரின் மாணுக்கரும்,

கோவை சபர்பன் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியருமாகிய

**புலவர் க. கி. இராமசாமி ஐயர்**

அவர்கள் இயற்றிய

# சாத்து கவி.

(நேரிசை ஆசிரியப்பா)

ஆதி பகவன் அருளிய நாலு
வேதம் எனும்பேர் ஓதநீர் முகந்து,
பத்திமா த்வமெனும் வித்தகக் கருக்கொண்,
டுத்தம குணமாம் உயர்வரை ஏறிக்,
கருணை யென்னும் காலுறக் குளிர்ந்து,
சிவப்பொலி வென்னும் நிவப்பெழில் விஞ்சி,
வாதம் புரிகொடும் பாதகப் பாம்புகள்
நெஞ்சங் கலங்கி நெடும்புற் றொடுங்கவும்
அவிச்சைப் பேரிருள் அகன்றுமெய்ஞ் ஞானச்
சவியிச் சகமெலாம் தழைக்கவும் ஆர்த்து,
மின்னிப் பொலிந்த தன்னிக ரில்லாச்
சங்கரர் என்னும் பொங்கெழில் மேகம்
கவிமழைச் சிந்தக் கடுகிப் பரந்ததே
தவாச்சிறப் புடைய சிவானந்த லகரி

என்பர் அறிஞர்; இத்தகு நூலை
அன்பர் யாவரும் அறிந்துகற் றுய்ய
முந்து தமிழில் மொழிபெயர்த் தெமக்குத்
தந்தவன் யாரெனின் சாற்றுவன்; எந்தம்
கொங்குநன் னாடுசெய் துங்கமா தவமே
இவ்வுருக் கொண்டதோ என்னவந் துதித்தோன்;
சைவசித் தாந்தச் சாத்திரத் தனிக் கடல்;
சாந்த மென்னுமோர் ஏந்தெழில் மாமலை;
திருநெறித் தமிழே தினமும் வளர்ப்போன்;
ஆரம் கண்டிகை யாகப் புனைந்தோன்;
பாரம் ஈசன் பணியல தில்லோன்;
ஈர அன்பின் இயம்புநன் மொழியொடு
பஞ்சாக் கரந்தினம் பயில்செந் நாவினன்;
எஞ்சாப் புகழ்நூல் பலவும் இயற்றுநன்;
என்னையும் பொருளா ஏற்றுப் பைந்தமிழ்
தன்னைச் சுவைக்கும் தகவுறச் செய்தோன்;
புவியர செல்லாம் போற்றித் துதிக்கும்
கவியர சாய **நடேச கவுண்டர்**
என்னுநற் பெயரோன்; இனியவிந் நூலின்
துன்னிய சிறப்பெலாந் தூக்கிமற் றிதனை
அச்சிற் பதிக்க அரும்பொருள் நல்கி
மெச்சத் தருபுகழ் மேவிய செம்மல்
**சென்னி யப்பன்** உண்மை யிற்
சென்னி யப்பன் திருவருள் பெறுமே.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# சிவானந்த லஹரி.

## பாயிரம்.

### விநாயகர்

சீர்பெருகு திருநாரை யூர்நம்பிக் ககிலகலைச்
செல்வஞ் சேர்த்துப்
பார்பெருகு மபயகுல சேகரற்கு மூவர்தமிழ்ப்
பனுவ லீந்தோன்
நார்பெருகு மன்பர்மனக் கூடமிருந் தவர்நயந்த
யாவு நல்குங்
கார்பெருகு கருணைமதக் களிற்றுமுகத் தைங்கரனைக்
கருதி வாழ்வாம் [1]

### அம்மையப்பர்

ஒருநிலையி லாதுபுவி மேல்கீழா முலகனைத்தும்
ஊச லாடும்
கருநிலையி னின்னுமுரு தெனையாள வேண்டுமெனுங்
கருணை யாலே
பெருநிலையுங் குருநிலையு மாய்நின்ற தன்றியருட்
பெண்ணு ணுகும்
திருநிலைநா யகிபிரம புரத்தீச னெனவமர்ந்தார்
திருத்தாள் போற்றி [2]

# IX

## திருஞான சம்பந்த சுவாமிகள்.

சூழியக் கொண்டையும் வெண்டிரு நீறு துதைநுதலும்
வாழி யுமைமுலைப் பாலுண்ட வாயு மலர்க்கண்களும்
ஏழிசைப் பாடலுக் கொத்து பொற்றாள மெடுத்தகையும்
காழியர் கோன்கழற் போதுமெப் போதுமென் கண்ணுளவே[3]

## ஸ்ரீமத் சங்கராசாரியர்.

இன்னல்தரும் பிறப்பிறப்பி லிடைவிடா துழலுயிர்கட்
கிரங்கிப் பூமேல்
பொன்னவிருங் காலடியிற் போந்துமுழு துணர்ஞானப்
புல வணுகி
மன்னுசிவ னேயிவனென் றுலகமெலா மதித்தேத்த
மறையின் அந்தந்
துன்னியசூத் திரமுறைசெய் சங்கரா சாரியன்றாள்
தொழுதுய் வோமே [4]

## மொழி பெயர்த்த ஆசிரியன் கூறிய அவையடக்கம்.

சங்கர பகவற் பாதா சாரியன் றகைமை யெங்கே
இங்கொரு சிறிய னேன்ற னிழிதகை யெங்கே யச்சோ
அங்கவன் புகன்ற பாக்க ளருந்தமிழ்ப் பெயர்க்க லுற்றேன்
பொங்கரா வளைத்த வெற்பைப் பூநாகம் வளைத்தல் போன்றே

---

மேற்கண்ட ஐந்து பாடல்களும் மொழி பெயர்த்த ஆசிரியரால்
இயற்றப் பெற்றவை.



# X



திருச்சிற்றம்பலம்.

மேவிலொன்றர் விரிவுற்ற இரண்டினர் மூன்றுமாய்
நாவின் நாலர் உடலஞ்சினர் ஆறர் ஏழோசையர்
தேவில் எட்டர் திருவாஞ்சிய மேவிய செல்வனார்
பாவந் தீர்ப்பர் பழிபோக்குவர் தம் அடியார்கட்கே.

மாருத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேருக நில்லாத வேடமே காட்டினான்
ஆருத தீயாடி ஆமாத்தூர் அம்மானைக்
கூருத நாவெல்லாம் கூருத நாக்களே.

[திருஞானசம்பந்த சுவாமிகள்]

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சிவானந்த லஹரி.

## சிவானந்தவியல்பு.

"பன்னி லூறும் பழத்தினு மின்சுவை
என்னி லூறி யெனக்கே களிதரும்
உன்னி லுன்னுமுன் னுவிடில் விட்டிடும்
என்னு ளீச னிருந்த வியற்கையே."

[ அப்பர் சுவாமிகள் தேவாரம் ]

### நூல்.

கலையானுர் கலைமதியங் கண்ணியானுர்
கருதுதவப் பலனொருவர்க் கொருவரானுர்
சலியாத பத்தர்தமக் கருளுந் தன்மை
சாற்றபய வரதகரந் தாங்கலானுர்
நிலையான நலமுலகுக்குதவ லானுர்
நினைதோறு முள்ளத்தே தோன்றலானுர்
உலவாத வானந்த வடிவமானுர்
உமைசிவனுர்க் கிவ்வணக்கம் உரியதாமே. [1]

அம் - அழகிய. கண்ணி - நெற்றிமாலை.

நினதினிய சரிதநதி நின்றெழுந்தே பாவ
நீடுதுக ளினையகற்றி
நினைவான காலின்வழி வந்துசஞ் சாரமாம்
நெடியவெப் பந்தொலைத்தே
எனதுமன மெனுமாழ மிகுதடத் தேநிறைந்
தெப்போது மொப்பில்லதாய்த்
தினமுமில குவதாக சம்புவே இன்பச்
சிவானந்த லகரி மாதோ. [2]

சஞ்சாரம் - ஜனனமரணம், கால் - கால்வாய், தடம் - தடாகம்
லகரி - வெள்ளம்.

மும்மறையி னெண்பொருளை முதல்வன்றன்னை
முக்கணனை நக்குமதில் மூன்றட்டானை
எம்மனத்துக் கினியானைச் சடையினானை
இயங்கரவ மாலையனை யுழைக்கையானைச்
செம்மைநெறி யருளுமகா தேவன்றன்னைச்
செழுஞ்சுடரைச் சிறியேற்குந் தயைசெய்வானை
எம்மையிலும் உயிர்க்கருளும் ஈசன்றன்னை
இயல்புலகுக் காம்சிவனை எண்ணுவேனே. [3]

இழிபயன்கள் தருவோர்க ளாயிரமா யிரமிமையோர்
இருந்தும் அன்னோர்
பொழிபயனை விழைந்தவரைக் கனவினிலும் பின்செல்லேன்
போந்தே யுன்றன்
உழிபயிலு மரியயற்கு முறலருமுன் னடிமலர்க்கே
யுறுதொண் டாற்றக்
கழிநெடுநாள் விழைந்திரந்தேன் சிவசம்போ
இனியேனும் கருணைசெய்யே. [4]

**அரசர் விரும்பும் அறிஞனல்லேன்.**

மிருதியினிற் சாத்திரத்தில் மருத்து வத்தில்
விளம்புசகு னத்தினறுங் கவியின் பாட்டில்
பெருகுபழங் கதைகளின்மந் திரத்தில் ஏற்றிப்
பேசுவதி னாட்டியத்தி லாசி யத்தில்
ஒருசிறிதும் வலனல்லேன் வேந்தர் என்னை
உகப்பாரோ பசுபதிபே ருணர்வோய் காத்தே
அருள்விபுவே யார்நானென் றென்னைத் தானும்
அறியாத பசுவினைப்பே ரருளி னாலே. [5]

மிருதி - ஸ்ம்ருதி, நாட்டியம் - கூத்து, ஆசியம் - நகைச்சுவை

## தர்க்கம் வேண்டாம்.

குடமோமண் ணுங்கட்டி யோவணுவோ கூர்புகையோ
    தீயோ நெய்த
படமோநூ லோமலேயோ போக்குவதோ கொடியயம
    பயத்தைத் தர்க்கம்
விடுமோநன் மதியுடையாய் குரல்வருந்தேல் சம்புவர
    விந்தத் தாளேத்
திடமோடு நினைவிரைவிற் சிதைவில்பர சுகமெளிதிற்
    சேர லாமே. [6]

" காச்சிலாதபொன்......பேச்சிலுமக் காவதென்
  பேதைகாள் பேணுமின் " — (திருஞான. தே.)

முன்னெனது மனமுனது மலரடியிற், சொற்புகழின்,
    முயலும் பூசை
தன்னிலிரு கை,செவியுன் சரிதத்திற், புத்தியா
    னத்திற், கண்கள்
உன்னுடைய திருவுருவக் காட்சியினி லுறுகபர
    சிவமே பின்னர்ப்
பன்னுபிற நூல்பலவும் பார்க்கலாம் பிறகரணம்
    பயன்பட் டாலே. [7]

இப்பிதனை வெள்ளியென்றும் வெங்காச்சாங் கல்லைமணி
    யென்று மாச்சேர்
அப்பதனைப் பாலென்றும் பேய்த்தேரை நீரென்று
    மறிவு கோணித்
தப்பிதமாய்க் கொளல்போலப் பெருந்தேவ நினைமனத்திற்
    றுனெண் ணுமல்
ஒப்பிலியே பசுபதியே பிறதெய்வந் தொழவுறுவோ
    னுணர்வில் லோனே. [8]

இப்பி - கிளிஞ்சில், அப்பு - நீர், பேய்த்தேர் - கானல்நீர்

### இதயமலர்.

அந்தோவீ தென்சிலர்நின் திருவடிக்கோ ரிதயமல
ரர்ப்பித் திங்கே
சந்தோச முறவறியார் உமைகேள்வ மிகுமாழத்
தடத்தும் மாந்தர்
வந்தேதா னறியாத கடுங்கானு நெடுமலையு
மலரைத் தேடித்
தந்தேக மிகவருந்த நுழைந்தலைகின் றனரறிவு
தானில் லாமே. [9]

### பயனுடைப்பிறப்பு.

எப்பிறவி யெடுக்கினுமுன் மலரடியை எண்ணும்பே
ரின்ப வெள்ளத்
தெப்பொழுதுந் திளைக்கும்விழைவெய்துவதேல் மனிதனோ
இமையான் றானோ
வெப்பமலை கான்விலங்கோ கொதுகுபசு மென்புழுப்புள்
விதத்தி லொன்றோ
அப்பிறவி தம்மிலெனக் கென்னகுறை யணுகுமென்னு
ளமருங் கோவே. [10]

விழைவு - விருப்பம், இமையான் - தேவன்

### சுமைதாங்கி.

மாணவனோ மனையவனோ வன்தவனோ துறந்தவனோ
சடையன் றானோ
காணுமெவ னானாலென் பரசிவதன் னுளமலருன்
கழற்கே வைத்தோன்
பேணியவன் வயத்தனே யாகுன்வநீ சம்புவவன்
பிறவிப் பாரம்
பூணுவையென் றாலுனது பெருங்கருணைத் திறனெம்மாற்
புகல லாமோ. [11]

" தமக்கன்பு பட்டவர் பாரம் பூண்பர் " ( அப்பர் சுவாமிகள் )

மலைமுழையின் மனையகத்தில் வெளியதனில் வனத்தில்மலை
முடியி னீரில்
சுலவுதழ லிடையுறுக வெவனெனினும் பயனதிலென்
தோன்றுஞ் சொல்லாய்
அலைவறநின் திருவடிக்கே யெவன்மனமா கிலுமுறுமே
லதுதான் யோகம்
கலைவருநற் சிவயோகி யவனேயன் ஞேனின்பங்
கைவந் தோனே. [12]

சடமதியாற் பயனிலதாய்த் தன்னையறி வரிதாகுஞ்
சமுசா ரத்தை
விடலரிதாய்ச் சுழல்கின்ற குருடனேன் எனைக்கருணை
மிகுதி யாலே
விடலிலைகாத் திடுதல்தகும் உனக்கெளியர் எனிற்பிறர்யார்
மெலிந்தோர்க் காக்கும்
திடமுடையார் நினையலதார் மூவுலகத் துளார்எனக்குச்
சிவனே சொல்லாய் [13]

எள்ளியெனைப் பசுபதிநீ தள்ளவிலை யென்னில்விதி
யெழுத்தை ஏனோ
பொள்ளெனப் போக் காதிருத்தி யதுவன்றோ புலையாசை
புகுத்தி யுன்றாள்
உள்ளவிடா தெனைத்திருப்பிக் கெடுப்பதுமற் றிலையாற்ற
லுனக்கென் றால்நீ
கிள்ளியதெ னெனிதினக நுதியில்விதி வலியதலை
கீழ்வீழ் மாறே [14]

விதி - பிரமன், பொள்ளென - விரைவாக

விரிஞ்சனெடு நாள்வாழ்க வேறுள்ள தலைநான்கும்
விமல நின்னால்
அரிஞ்சுவிழா மற்காக்கப் படுகவவன் அன்றேவிவ்
வவனி மீதே
தெரிஞ்செளிமை யென்றலைமேற் நீட்டினவ னெளியர்துயர்
தீர்க்குந் தொண்டே
புரிஞ்சுதிரி நின்கடைக்கண் தானேவந் தெனைநன்கு
புரக்கு மாலோ. [15]

விரிஞ்சன் - பிரமா

புண்ணியத்தின் பலத்தாலோ வுடையாயு னருள்சிறிதே
பொருந்தி யோவென்
கண்ணெதிர்நீ தோன்றுதியென் றுலுமுன தடிமலர்நான்
காண்ப தெங்கே
அண்ணலுன தடிவணங்க அதிவிரைவு மிகுமமரர்
அணிந்த செம்பொன்
வண்ணமணி மகுடநிரை யான்காண வகைநெருங்கி
மறைக்கு மாலோ. [16]

நீயேயா ருயிர்க்கோங்கு நிலைமையளிப் பவன்சிவனே
நின்னா லன்றே
மாயோனே முதலமரர் வான்பதவி வகிக்கின்றார்
வள்ளால் மீண்டும்
ஓயாதே தொழலானு ருண்டோவோ ரளவுன்கண்
ணோட்டத் திற்கென்
பாயாசைக் களவுண்டோ வெனையளிக்கத் தயைநிறைகண்
பார்ப்ப தென்றே [17]

கண்ணோட்டம் - தாட்சணியம்

சொல்லாயப் பிரமனுக்குத் துணைசெயவோ சிவமேநீ
சும்மா வுள்ளாய்
பொல்லாத வாசைநிறைந் திழிசெல்வர் மனைப்புகுத்திப்
போமா றின்றி
எல்லாத்தீ வினைக்குமிட மாயின்ன லுறுபிறவி
யெனக்கு நீக்காய்
நல்லாய்நின் னன்பர்பா னின்றநையித் தகைத்தென்றல்
நாமுய்ந் தோமே. [18]

## மனக்குரங்கு.

எப்போது மோகவனத் தேதிரியு மிளமடவா
ரேந்து கொங்கை
வெற்பேறிக் கூத்தாடு மாசாபா சக்கிளைமேல்
விரைந்தே தாவும்
எப்பாலுங் கண்டபடி யியங்கு மென்றன் மனக்குரங்கை
யீர்த்தே யன்பால்
தப்பாதுன் வசமாக்கிக் கொள்ளுக்கா பாலியிது
தரும மாமே. [19]

## மனக்கூடாரம்.

உறுதியெ னுந்தூ ணிடையற லில்பல உயர்குண
மவைகட் டியதாமே
உறநினை யிடமே கும்பல சித்திர முளபது
மாட்டிய முறும்வெளிதே
உறுமொளி வளரென் மனமாகுங்குடி லும்மையுட
னுறைவா யுடையானே
உறுகண சேவித பொருமத ஞந்தக உயர்செய
முன்னுவ துளதாமே. [20]

குணம் - பண்பு, கயிறு. பதுமாட்டியம் - லட்சுமீகரம், தாமரைக்கூடம்
குடில் - கூடாரம், செயம் - வெற்றி.

## வன்மனக்கள்வன்.

பேராசை வயமாகிப் பொருள்கவரச் செல்வர்மனைப்
 பிரவே சிக்கத்
தீராத முயற்சியொடு திரிகின்ற வென்மனமாந்
 திருடன் றன்னை
ஆராலே யொறுத்திடலாம் கள்வர்தலை வாநின்வய
 மாக்கிக் கொண்டே
தாராயே நின்றயைதான் சங்கரனே பிழையில்லாத்
 தமிய னேற்கே. [21]

## விதிஅரி பதவி வேண்டா.

செய்யலுற்றே னினைப்பூசை சங்கரனே யருளின்னே
 தீரா வின்பம்
ஐயவிதி அரிபதவி தருவாயேல் விண்ணொடுமண்
 ணடைந்து சென்னி
துய்யமல ரடிதேடப் பறவைவிலங் காயுழலுந்
 துன்ப மாற்றேன்
வையமனல் புனல்கால்விண் மதியிரவி யுயிர்நிறைந்து
 மன்னு வோனே. [22]

ஒன்றுவதென் றேகயிலை மலைமேற்பொ னுபரிகையி
 லுன்பூன் சம்போ
நின்றுகணத் தொடுகுவித்த கைதலைமேல் உடையேனாய்
 நிறைந்தே அன்பால்
நன்றுவிபோ சாம்பவெல்லா முடையானே பரமசிவ
 நல்காய் நல்காய்
என்றுசுக மாய்க்கற்ப மொருநொடியாய்க் கழியும்வகை
 யிருத்த ருனே. (23)

கண்குளிர வென்றுகொலோ காண்பதயன் ஆதிதுதி
    கரைய வெல்க
எண்குணவென் றிருடியர்கள் வாழ்த்தநந்தி பிருங்கிமுத
    லியவ ராடத்
திண்விடைமேல் மணிமிடறுங் கண்மூன்று முமைவாமச்
    சேர்வுஞ் செங்கை
யுண்மழுவு மானுமுடை நினதுதிருக் கோலமனா
    முருகு மாறே. (24)

எந்நாளி லெய்துவதோ கிரிசநின தெழில்கண்டுன்
    னிணையார் பாதப்
பொன்குன மலர்பிடித்தென் புன்றலைகண் ணுடுமார்பிற்
    பொருந்த வைத்து
மன்னுரு மணமுகர்ந்து மலரவன்மாற் கரியபெரு
    மகிழ்ச்சி கூர்ந்து
தன்னேரில் பேரின்ப சாகரத்தில் மூழ்குவதித்
    தமிய னேற்கே. (25)

**நெஞ்சமே உனக்களிப்பது.**

பொற்சிலை கைச்சிலை யருகே தனபதிநின் திருவாசற்
    பொருந்தும் தேவ
நற்றருக்கள் சுரபிசிந்தா மணிமுடிமேல் நளிர்மதிய
    நன்மைக் கெல்லாம்
இற்பொலியுந் திருவடிக ளெனிற்கயிலைக் கிரிசயன
    ஏழை நாயேன்
நிற்களிப்ப தெவனிந்த நெஞ்சமே உனக்களிக்க
    நேர்ந்த தாமே. (26)

சிலை - மலை, வில். தனபதி - குபேரன், சுரபி - காமதேனு

## இம்மையே பலன் பெற்றேன்.

நினதுவழி பாடுசா ரூப்பிய மகாதேவ னேயென
　　நிகழ்த்து மொன்றே
யுனதுசா மீப்பியஞ் சிவபத்தர் கூட்டமுற்
　　றுரையாடல் சாலோக்கியம்
மனதுநின துருநினைதல் சாயுச்சி யந்தந்து
　　மற்றுநா னிப்பிறப்பே
புனிதபல னுற்றுளே னுமைகேள்வ வீரேழு
　　புவனமுழு துடைய கோவே. (27)

தொழுகின்றே னின்பாத தாமரையே நாடோறும்
　　தோன்று லுன்னை
எழுவதுமே நினைகின்றேன் சம்போநின் சரணுனேன்
　　வாழ்த்தி ஏத்தி
விழைவனவுன் பாலிரந்தேன் தேவரெலாம் விரும்பும்விழி
　　அருளை நல்கி
அழிவில்பர சுகமுறவொர் மொழிபுகல்க வுலககுரு
　　வான தேவே. (28)

## கூடுமோ நாயடியேன் செய் குற்றேவல்.

மெல்லாடை புனைவதற்குப் பரிதியலேன் மலர்சாத்த
　　விண்டு வல்லேன்
நல்லார மணமேந்த வாயுவலே னுணவளிக்க
　　வானோர் நாதன்
அல்லேன்பொற் கலமேந்தக் கனகனலேன் பசுபதியே
　　அடியே னன்பாய்
எல்லார்க்குங் குருவேநின் பூசையியற் றுவதெவ்வா
　　றிந்து சூடி. (29)

விண்டு - திருமால், கனகன் - இரணியகர்ப்பன்

## நஞ்சுண்ட கருணை.

உன்னகட்டும் புறத்துமுள நிற்பனவு நடப்பனவு
முய்யு மாறும்
மன்னமரர் தொலையாமன் மருந்தாகு மாறுமன்றோ
வைத்தாய் கண்டத்
துன்னரிய கொடியசுடு விடமதனை யுள்விழுங்கா
யுமிழ்ந்தா யல்லை,
எல்லையில்லா நின்னருளின் வல்லமைக்கிஃ தேசான்று
மிமையோ ரேறே. (30)

அகட்டும் - வயிற்றிலும்.

வெப்பா லமரர் குழுவெல்லாம்
வெருவும் விடமெவ் விதம்பார்த்தாய்
கைப்போ தகத்துத் தாங்கினுய்
கனிந்த நாவற் பழங்கொல்லோ
செப்பாய் நாவில் வைத்தனையே
சித்த குளிகை யோசம்போ
தப்பா மிடற்றில் நிறுவினையே
சாம மணியோ தயைக்கடலே. (31)

ஒருகா னினதிரு கால்தொழு வதுபுகழ்
வதுமல ருய்ப்பதகம்
உருகா நினைவது கதைவின வுவதெனு
முயர்வழி பாடிதனுல்
வருகா தோகதி யெனையனை யர்க்கினி
மடிவுறு சுரர்வழிபா
டருகா தீவதெ னவர்பால் விழைவதெ
னளிவள ரொளியிறையே. (32)

## ஊழிமுதல்வன்.

உலக டங்கவழி யிறுதி யின்கணம ர்களொ
ழிந்தனருள் வெருவினர்
அலைவ ரும்பல்முனி வரர்க ளின்பநிறை
யமலனீ யொருவ னேயதன்
நிலைமை கண்டசைவி லாம னின்றுவிளை
யாடினய் பசுப தீநினல்
வலமென் சொல்வதட லாண்மை யார்க்குளதுன்
மாறிலா வுறுதி வாய்ப்பர்யார். (33)

வரவுசெல விருப்பெனக்கு முக்கணக்கர் நீரேதான்
வகுக்க வல்லீர்
தரநலங்கள் முயல்கின்றீர் இம்மைமறு மைப்பயன்கள்
தரவுங் கிற்றீர்
கரவறவுட் புறமெங்குங் கலந்துநின்றீர்
முழுதறிவீர் கருணை மிக்கீர்
தெரிவுறுப்ப தென்னுமக்கென் னுயிர்த்துணைநீ ரெனநினைவேன்
தினமுந் தானே. (34)

பத்தியெனு நூல்வரிந்துட் களிப்பமுத நிறைத்துண்பத
பல்ல வங்கள்
சித்தெனுந்தென் னம்பழத்தி னெடுமனமாஞ் சிறந்தகுடந்
திகழ வைத்துச்
சுத்தமுற வுடல்மனைமங் களமுறுத்த வைந்தெழுத்துஞ்
சொல்லா நின்றேன்
அத்தவுமை மணவாளா புண்யாவா கனமன்பா
லாற்றி னேனே. (35)

### வேதத்தின் பயன் சிவனே.

அலையுமன மத்தினிடை அன்பென்னும் திண்கயிருர்த்
தரிய வேதத்
தொலைவருவே லையைக்கடைந்து புலவர்குழாம் பெறுகின்ருர்
சோமன் றன்னைப்
பொலனுறுகற் பகத்தைச்சிந் தாமணியைத் தேனுவினைப்
பொன்ரு வின்ப
நிலையருளுஞ் சீர்த்திருவைக் கவலையொன்று மில்லாத
நிலைசேர் கின்ருர். (36)

சோமன்-சந்திரன், சிவன். தேனு-காமதேனு. புலவர்-தேவர், கற்ரோர்

### சந்திரனுக்கும் சிவனுக்கும் சிலேடை.

முன்னையபுண் ணியத்திசையோங் கலின்வழியின் முளையமுத
மூர்த்தி யாகிப்
பன்னுகளங் கறுத்தென்றுஞ் சிவம்பரப்பிக் கணம்பரவப்
படுவோ ளுகி
மன்னியமா னுடனிறைந்துள் ளிருணிக்கும் சோமன்மன
வானில் வந்தால்
துன்னுசுக வாரிதிமே லோங்குமதிற் புலவருளஞ்
சுகிக்கு மாதோ. (37)

புண்ணியத்திசை-கிழக்குத்திசை. ஓங்கல்-மலை. களம்-கழுத்து.
களங்கு அறுத்து-இருளை நிக்கி. கணம்-நட்சத்திரக்கூட்டம், சிவகணம்

### சிவராஜா.

புண்டரிக மனநகரத் திராசசே கரனெவரும்
போற்ற வின்பங்
கண்டவருக் கருளவிருந் தனன்,அறம் ஓங்கியதுமறம்
கழிந்த தென்னை
யண்டுவதற் கஞ்சியறு பகையிரிந்த, வளித்தநலங்
காலம் யாவும்,
தண்டலரு சுகம்விளைந்த, தறிவின்ப முதற்பயிர்கள்
தழைத்த மாதோ. (38)

புண்டரிக மன நகரம்-மனமாகிய புண்டரிகபுரம்.
இராஜசேகரன்-சக்கரவர்த்தி, சிவன். தண்டல் அரும்-நீங்காத.

## பத்திப் பயிர்.

நெஞ்சமெனு நன்செய்வளர் பத்தியெனும் பயிர்அறிவாம்
நிலைஏற் றத்தால்
செஞ்சொலெனும் குடங்கொண்டு சிவசரிதக் கடல்முகந்து
செய்யுள் வாய்க்கால்
விஞ்சவிறைத் திடவமுதம் பாய்ந்துபயன் விளைந்ததனுல்
மிக்கு நின்ற
பஞ்சமெனுந் துயர்நீங்கிக் கடையேனுய்ந் தனன்பகவ
பயமற் றேனே. (39)

நன்செய் - வயல். கடையன் - உழவன்.

## தொழும்பு செய விருப்பல்.

தீயவினை யுற்பாதந் தீர,விழை திருவெய்தத்
துதித்தல், உன்றன்
சேயதிரு வடிநினைதல் தொழுதல்வலம் வருதல்சிவ
பூசை செய்தல்,
நேயமொடு காணுதல்கேட் பதுவேட்ட வாய்நெஞ்சந்
தலைகால் கைகள்,
கூயெனைப்பல் முறையேவு நினைப்பிமவு னம்வேண்டேன்
கூற்றின் கூற்றே. (40)

## மனக் கோட்டை.

திடமதிலு மெழிலுமுய ரமுமுடைய, தெழும்பல்குணச்
சேனை வாழும்,
கெடலருநுண் பொறிவாயி லுள;வென்றும் கேடில்விழுப்
பொருள்க ளார்ந்த,
தடன்மிகுமென் மனவரணங் குறையிலதா மதிலென்று
மமர்ந்து வாழ்க,
அடர்துருக்கா திப்பிரிய னுனவெம திறைவவென்று
மழியாச் சோதீ. (41)

மன அரணம் - மனமாகிய கோட்டை.
துருக்கா அதிப - சத்தியின் கணவ, கோட்டைத்தலைவ.

## வேடர்தலைவன்.

திரிவதுமேன் பலதிசையும் வேட்டைக்குக் கிரிசாநீ,
சிறியேன் சிந்தை
பிரிவறவீற் றிருத்தி,பிறர் நுழைவருமிப் பெருங்கானிற்
பெரும தஞ்சேர்
கரியமயக் காசையழுக் காறுசின மெனும்விலங்கு
களுன்றி வாழ்வ,
பெரியவிருப் போடுவேட்டை புரிந்துமகிழ், முதல்வேடர்
பெரும நீயே. (42)

## சிவ சிங்கம்.

உழையதனைக் கையேந்தி, யுடற்றுபுழைக் கைம்மானை
யுரித்துப், பொல்லாங்
கிழைவிழைவின் வருமுழுவை தனையழித்,தெல் லாமிறுதி
இயற்ற வற்றாய்
மழைதவழு மலையுறைவ தாகியபஞ் சானனமென்
மனமா கின்ற
முழையுளதா லெப்போது மச்சமிலை அஞ்சுவன
முன்னு வன்றே. (43)

"சிவனே தேவர் சிங்கமே" (சுந்தரமூர்த்தி சுவாமிகள்) உழை - மான், உழுவை - புலி. பஞ்சானனம் - சிங்கம், சிவன்.

## திருவடிக்கூடு.

அரியமறைக் கிளைமுடிய தாகியிரு பிறவிப்புள்
ளனைத்துஞ் சேரப்
பெரியசுக முதவியுறு கண்ணகற்றி நிலைபேறு
பெற்ற தாகி
உரியபலன் பொருந்தியுள சங்கரன்றாண் மலர்க்குடம்பை
உற்று வாழ்தி
திரியவினி வேண்டாவே றிடமலைவ தேன்மனமாஞ்
சிறந்த புள்ளே! (44)

குடம்பை - கூடு, புள் - பறவை.

## திருவடி மாடம்

மனமெனுநல் லோதிமமே, வளர்மதியி னொளியின்வெளி
தாகி மன்னி,
யினவுகிரி னொளிவளமுற் றுயர்பதும ராகவெழி
லியைந்தே, வேண்டி
முனிவரரா மஞ்சங்க ளமருமைகோ ணடிமாட
முன்னித் தொண்டாம்
இனியபெடை யினமோடு மறைந்துவிளை யாடியினி
திருத்தி யாலோ. (45)

ஓதிமம் அஞ்சம் - அன்னப்பறவை, உகிர் - நகம்.

## சிவத் தியான வசந்தம்.

சம்புநினை வெனும்வசந்தஞ் சாரமனச் சோலைமுதிர்
சருகாம் பாவக்
கும்பலுதிர்ந் தன,வறமென் றளிர்தளிர்த்துப் பத்தியெனும்
கொடியின் கூட்டம்
வம்பமரு நனைசெபநன் மலர்நல்ல வாசனையு
மலிந்த, ஞான
இன்பமருந் தேன்பெருகிற் றிணையில்சிவக் கனிபழுத்தே
யிலங்கிற் றுலோ. (46)

வசந்தம் - இளவேனில், நனை - அரும்பு.

## சிவத் தியான தடாகம்.

மனவரச வோதிமமே சிறுசேற்றுக் குட்டைபடர்
வாதை வேண்டா,
அனவரத மானந்த வமுதுநிறை வது,முனிவ
ரமரர் சிந்தை
யெனுமலர்கள் கஞலுவது, தெளிந்ததுற வோரென்னு
மெகின மேவி
அனகமருள் வது,சம்பு நினைவென்னு நறும்பொய்கை
யடைவா யின்னே. (47)

அரச ஓதிமம் - ராஜஹம்ஸம், எகினம் - அன்னம்

### திருவடிப் பாத்தி

அன்பென்னுங் கொடியரன்பொ னடிமலர்ப்பாத் தியிற்றேன்றி
வளர்ந்து மாறு
வின்பென்னு மமுதார்ந்துள் ளுறைப்பென்னுங் கொழுகொம்பி
லிவர்ந்து மேன்மேல்
பொன்பன்னங் கிளையடர்ந்து மனப்பந்தல் படர்ந்துகுறை
போக்கி நோக்கி
முன்பண்ணு நல்வினையால் வாழ்வவியாம் விரும்புபயன்
முழுது மீந்தே (49)

பொன் பன்னம் - பொன்னிறமான தளிர்.

### மல்லிகைக்கும், சிவனுக்கும் சிலேடை.

அந்தியினின் மலர்ந்தாடு, மழகாகச் சுருதிசிர
மமரு, மார்வ
முந்துபிர மரமாத ராரும்,நல் வாசனையின்
விளங்கும், முசும்
அந்தமறு போகியர்மே லணியாகும், பூவனைத்து
மமர்வ தாகும்,
வந்துசிவா லிங்கிதஞ்சேர் கிர்மல்லி கார்ச்சுனத்தை
வணங்கு வேனே. (50)

சுருதி சிரம் அமரும் — உபநிடதங்களில் இருக்கும்; காதிலும் தலையிலும் பொருந்தும், பிரமரமாதர் - பிரமராம்பிகை. போகியர் — பாம்புகள், போகம் நுகர்வோர். சிவாஆலிங்கிதம் - உமையால் தழுவப்படுதல்.

### வண்டுக்கும், சிவனுக்கும் சிலேடை.

பிருங்கிவிழை வுறுமாடல் பயின்றுகரி மதஞ்சுருக்கும்,
பிரியமுறு மாதவமா லழகதனில், நாதந்
தருங்,கவின்மா மணிநிகருஞ், சமரமதன் தனக்குத்
தரும்பயத்தைத், தருவனத்தார் சார்பக்க முளதாய்
அருங்கண்கள் களிப்புறச்சீ பருப்பதத்தி லமரும்,
அங்கிங்கெ ணுதாகும் பிரமரத்தி னரசே ;
சுருங்கலிலா தலர்ந்தவிரு மென்மனத்தா மரையில்
துணையினொடு மகலாது தொடங்குகவின் பாட்டே (51)

பிருங்கி - ஒரு முனிவர்; பெண்வண்டு, சீபருப்பதம் - ஸ்ரீசைலம். பிரமரத்தின் அரசு - அளியரசு.

### மேகத்திற்கும், சிவனுக்கும் சிலேடை

அருளமுத மழைபொழிந்து துயர்க்கோடை வெப்பகற்றும்,
ஆற்ற லோங்கிப்
பொருவருகல் விப்பயிரின் போகமுறப் புலவர்குழாம்
போற்றும் பாற்ருய்,
உருவிரும்பு வதுமேவி யாடுமரு மயிலன்பர்
உகந்த தாய்,வித்
துருசடில முறுமுகிலே யுனைநோக்கி யென்மனப்புள்
சுழலு மாதோ, (52)

அருமையில் அன்பர் - அருமையான, மயில்போலும் அன்பர், வித்துரு - பவளம், வித்யுத் (மின்னல்) என்பதன் திரிபுமாம்

### மயிலுக்கும், சிவனுக்கும் சிலேடை.

விண்ணுற் சிகியாய் விடவாவின் வேந்தால்
விரிக்குங் கலாபியாய்
உண்ணூரமுத உபதேச உரையாற் கேகி
யாயினையென்
றெண்ணுற் பாட விமயத்தி னெழிற்கார்
மின்கண் டினிதாடிப்
பண்ணூர் வேதப் பொழில்பயிலும் நீலகண்டம்
பரவுவனே (53)

சிகி கலாபி கேசி நீலகண்டம் என்பன மயிலின் பெயர்கள். இவை சிவனுக்கும் ஏற்புடையன ஆக்கப்பட்டன.

### ஆடுமயிலான் சிவன்

மாலைப் பொழுதே முதுவேனில் மறையும்
பருவ மாகவரி
சால முழக்கு முழவொலியே சாலு
மழையின் முழக்காக,
ஆலு மடியார் ஆனந்த விழிநீர்
பொழியு மழையாகக்,
கோல மலையின் பெடைகளிக்கக் குனிக்கு
மயிலைப் பாடுவனே. (54)

அரி - திருமால். ஆலுதல் - ஆடுதல், ஆரவாரித்தல், மலையின் பெடை - பார்வதி

ஆதியள வறுசோதி யாகிமறை மொழியினறி
வாகியடி யார்வழுத்தும்
நீதிவடி வாகியறி வின்பமய மாகிநிலை
பெறவுலக நிறுவுமருளாய்க்
கோதிலனு பூதியர்க ளுணர்வதா யிமையவர்கள்
குழுவேத்து மாயாவியாய்த்
தீதில்நட மாடுசடை யாய்சம்பு வித்துதியுன்
சேவடியி லுறுகமாதோ (55)

நித்தியர்கு ணத்திரய வுருவர்புர தகனருமை
நேசர்மெய்ப் பொருளர்சம்பு,
பத்தியர் தமக்கருளு மில்லறத்தின் முதல்வர்,
பரவுமுனி வரருளத்தர்,
வைத்தவர் படைத்துலக மூன்றினையு மாயையால்
மறைமுடியி லுலவுபவர்தாம்
நிர்த்தமிடு பவர்மாலை தனில்நீடு சடையர்பால்
நேர்கவித் துதிமாலையே (56)

எந்நாளும் வயிறோம்பு மாறுபொரு ளாசையால்
எத்தகையர் பாலும் வீணே
பன்னாலு திசையிலும் திரிதர்வே, னெங்குமாம்
பகவபசு பதிசருவனே
உன்னேனு னக்கடிமை செய்ய மற்றும்மையி
லுளுற்றுநல் வினைவயத்தால்,
அன்னே யிருத்தியெவ் வுயிருள்ளு மாதலால்
அடியனையும் ஆளுதியரோ (57)

### சிவசூரியன்

வாரிச மலர்க்கினிய னொருவனே மண்விண்
மறைக்கின்ற விருள்கடிந்து
நேரிய விழிக்கிலக் காகுவான், பசுபதீ
நீயெண்ணி லாதகோடி
சூரியரு நாணுமொளி யுடையை,யென் ளுலுமேன்
தோன்றுகிலை யென்னுளிருளெவ்
விரிய முடைத்தெனினு மோட்டியென் விழிமுன்பு
மேவியருள் புரிவிமலனே. (58)

### பத்தி மிகுதிக்குத் தக்க உவமைகள்

அன்னஞ்செந் தாமரையை, யளிமுகிலைச் சாதகப்புள்,
அருக்கன் றன்னை
உன்னுஞ்சக் கரவாகம், நிலவினைச்ச கோரமிவை
யுறவி னாலே
கொன்னுந்த முள்விழைதல் போலென்றன், மனமார்வம்
கூரும், ஞானம்,
புன்னும்பன் மறையமர்ந்து பரமசுக முதவுமடிப்
பதுமப் பாலே. (59)

### அரனடி மலரை அடைக வல்விரைவில்

கடும்புனலீர்ப் பவன்கரையை, வெயினடந்து களைத்தோன்
கடுகிமர நிழலை,மழைக் கஞ்சினவன் மனையைச்,
சுடும்வறுமை யான்வழங்குந் தொலைவில்பொரு ளானைத்,
தூயவறத் தானைவிருந் தொளியையிரு ளுழந்தோன்,
நடுங்குகுளிர்க் குடைந்தவன்வெந் தீயை,வெகு விரைவில்
நாடுவது போலவென்றன் நன்மனமே நீயும்
அடும்பயங்க ளனைத்துமழித் தழிவிலின்ப மளிக்கும்
அரனடித்தா மரைமலரை அடையமுய லுதியே. (60)

### பத்தி என்பது யாது

அங்கோல மரத்தையதன் விதையுங்,காந் தத்தையய
ஞசி யுந்தான்,
மங்காத கற்புடையாள் கொழுநனையு, மரத்தைமலர்க்
கொடியும், பாய்ந்து
பொங்கோதை யாறுகட லினையும்போன், மனவிருத்தி
புரங்கள் செற்ற
எங்கோனின் மலரடியை யெய்தியிருப் பதுபத்தி
யென்ப தாமே. (61)

### பத்தியெனும் உத்தமத்தாய்.

நின்சீர்த்தி யமுதினைச்சொற் சங்கத்தா லூட்டி,நிறை
பசியை நீக்கி
யுன்பாத நினைவெனுங்கட் டிலிற்கிடத்தி யுடற்புளகத்
தாலே போர்த்து
மன்பூதி சாதனத்தாற் காப்புறுத்திப் புறங்காப்பாள்,
வானோர் கோவே,
அன்பான தாய்,பத்த னுனசிறு குழவிதனை
யருளி னுலே. (62)

### ஆற்றல் மிக்கது அன்பு.

அச்சோவீ ததிசயமன் பெண்செய்ய மாட்டாதா
லரனுர்க் கன்று
வைச்சேகால் வழிநடக்குஞ் செருப்புகூர்ச் சப்புல்லாய்
வயங்கிற் றேவாய்
உய்ச்சேகொப் புளிநீரு மபிடேக மாயிற்றே
உருசி பார்த்தே
மெச்சூனு மமுதாச்சே வேட்டுவன்மெய்
யன்பரிலே மிக்கா னன்றே. (63)

## என்மனப்பாதுகை ஏற்க நின்கழலே.

கொடுங்காலன் மார்புதைத்தல், கொடுமுயல கனைமிதித்தல்,
குவட்டில் வாழ்தல்,
விடுங்காந்தி யமரர்மணி முடியுரிஞல், விதத்தாலும்
விரைமென் பாதம்
நடுங்காதோ? மென்மையா லென்மனமா நன்மணிப்பா
துகையை நாத
தொடுங்காத லொடுமெங்கு வேண்டுகினுஞ் செல்கவுமை
துணைவ ஞரே. (64)

தொடும் - தொட்டுக்கொள்க.

## அடியார் பெருமை.

மலைமகள்கா தலவுனது மலரடியன் பர்க்கரிதென்
வைய மீதே,
கொலைமறலி யுதைபடுத லையுற்றுக் குலைந்திரிவான்,
அமரர் கூட்டம்
தலைமகுட மணிவிளக்கா லாரத்தி சுழற்றிடுவர்,
தானே வந்து
மலைவறுகை வல்யமகள் மார்பணைப்பாள் அவர்க்கண்டு
வணங்கி மாதோ (65)

மறலி-யமன் கைவல்யம்-மோட்சம்

எவ்வுயிரும் படைக்கின்றுய் விளையாடச் சம்போநீ,
எவரும் உன்றன்
செவ்விளையா டற்குரிய மாஞவரெனில் நான்செய்
செயல்கள் யாவும்
ஒவ்வுமுனக் கின்பம்விளைப் பதனுலே யையமிலை,
யுடையாய் என்னை
நையவிடா தளிப்பதுவு முன்னருளுக் கிசைந்ததொரு
ஞாயந் தானே. (66)

## பற்றற்ருன் பற்று.

இன்பப் பெருக்காம் கண்ணருவி
இலங்கு வதனே உடற்புளகம்
மன்பொற் புறவே விளைப்பதனை
மாருப் பதவி விருப்பாளர்
நன்பற் றிருக்கும் வியலிடத்தை
நம்பன் சிவதி யானத்தை
என்பற் ருகப் பற்றினென்மற்
றெல்லாப் பற்றும் விடுமாறே. (67)

## ஈசன் நேசப் பசு

இன்பா கும்பால் வேண்டுதொறும்
ஈயு மதனை இறைவாநின்
பொன்பா தத்தண் ணிழற்ருெழுவம்
பொலியு மதனைப் புண்ணியத்தால்
என்பா லிருக்கும் ஒரேவொன்றை
ஈச னேச மாப்பசுவை
அன்பாற் புரத்தல் கடனுனக்காம்
அறவே றுயர்த்த பசுபதியே. (68)

ஒரே ஒன்று-ஒன்றேயொன்று. அறஏறு-தருமரிடபம்

## மதிக் குறைவு எனக்கிலலே

கலைக்குறை பசுக்குணம் விளங்குறு களங்கம்
அலைச்சலுறு கோணைநடை யாதியுள னேலுன்
மிலைச்சொளி முடிப்பணிதி யாகமிளி ரேஞே
மலைக்கொடி விருப்புறு வளப்பவள வெற்பே. (69

கலைக்குறை-கலையின் குறைவு, கல்விக்குறைவு.
பசுக்குணம்-மிருகசுபாவம். கோணேநடை-ஒழுங்கீனம்.
பணிதி-ஆபரணம்.

### ராஜசேகரன்

திறலாள னருளுருவன், செப்புமன வறுபலங்கள்
சேர்க்க வல்லான்,
உறலாய வுலகங்க ளனைத்தினுக்கு மேலானுன்,
உள்ளா னென்னுள்;
விறலாளன் ராசசே கரன்அகத்தும் புறத்தும்,யான்
விரும்பி மேவல்
உறவாட்செய் திடவெளிய னுகியுளான் குறையினிஎன்
னுளது தானே. (70)

ஷிறல்-வெற்றி ராஜசேகரன்-மன்னர் மன்னன், பிறைசூடி.
ராஜா-சந்திரன்

### சிவபக்திச் சாம்ராஜ்யம்

உள்ளமெனும் வில்லையுய ரன்பென்னுங் குணம்பிணித்தே
யுறத்தான் வாங்கிக்
கள்ளமறு சிவநினைவாம் கணைதூவிப் பவப்பகையைக்
கடந்து வென்றே
எள்ளலறு மகிழ்வோடு நல்லறிஞன் என்றுநிலைத்
திருக்கு மேலாம்
வள்ளலர சத்திருவை மருவிநல முறுகின்றான்
மண்ணின் மீதே. (71)

குணம்-வில்நாண், பண்பு. பவம்-பிறவி, பாவம்.
அரசத்திரு-அரசாட்சிச்செல்வம்.

### சிவபாத நிதியம்

இடையறவி லாதநினை வெனுமையி னுதவியா
லிறைவநின் திருநாமமாம்
படைநிகரு மந்திரத் தான்மகா பலிதந்து
பரவிரு ளிடம்பிளந்து
அடையவரி தமரர்க்கு மாகியர வினமணிந்
தமருநின டிப்பதுமமாம்
கெடலரிய நிதிபெற்று நுகருமவ ரேபேறு
கிட்டினவ ரிம்மை தனிலே. (72)

மை-அஞ்சனம். பதுமாம்நிதி-பத்மநிதி.

தழுவுதிரு நிலமகளி ருடையமால் பன்றியாய்த்
தானலைந் ததுமறிதியே
எழுதரிய பரமசிவ னடியிணைகள் காணவென
தினியமன மேபினென்னே
பழுதில்விழை வுறுமுத்தி விளைபுலம தாகுமெம்
பகவனடி மலரிணைக்கே
கெழுவுதொண் டுற்றுச்சிவகதி யடைய முயலுக
கிடைப்பதரி திப்பிறவியே. (73)

திரு-ஸ்ரீதேவி. நிலமகள்-பூதேவி.

## மனப் பூமஞ்சிகை.

தளையா கியஆ சைகிலே சமிக
விளைவா சனைபோய் விரைமே வவென
துளமா கியமஞ் சிகையுற் றெருளிர்க
வளமா கவுடுக் கையர்தாண் மலரே. (74)

தளை-பந்தம். வாசனை-பூர்வசென்ம வாசனை. விரை-நறுமணம் மஞ்சிகை-பூப்பெட்டி. மாகஉடுக்கையர்-திகம்பரர், சிவன். மாகம்-திசைகள்.

## மனக் குதிரை.

நல்லவிலக் கணமுடைத்து, நசையுநடை யுடைத்து,
செல்லும்விரைந் திங்கிதங்க டேறுவது, குற்றம்
இல்லது,மங் களநிறைந்த, தென்மனமா வூர்க
வெல்லும்விடை யாயிறைவ வேளைமுனி வோனே. (75)

நசையும்-விரும்பத்தக்க. இங்கிதங்கள்-குறிப்புக்கள். மங்களம் நிறைந்தது-பஞ்சகல்யாணி. மா-குதிரை. மாகம்-திசைகள்.

## பிறவிப்பயன்

பெருந்தேவன் கழல்வானிற் பிறங்கிடுதொண் டெனுமேகம்
இருந்தேபே ரின்பமழை பொழியநிறை மனக்குளத்தான்
அரும்பிறவி பலன்விளைந்த தாகும்அஃ தில்லாதோன்
வருந்திய பிறப்பவமே வருத்தமுழன் றழிந்ததுவே. (76)

பெருந்தேவன்-மகாதேவன்.
மனக் குளத்தான்-மனம் ஆகிய குளத்தினை யுடையவனது.
அரும்பிறவி-அரியபிறவியே. அவம்-வீண்.

## உள்ளத்தின் ஏக்கம்.

உயிர்க்கேள்வன் றனைப்பிரிந்த கற்புடையாள்
போலஉன்ருண் மலர்க்கென் னுள்ளம்
அயிர்ப்பேது மின்றிநினைந் தைந்தெழுத்தை யலகிட்டே
யசைவின் ருகத்
துயிற்போதும் பாவனைபின் கர்ணுதல்தோத் தரித்தலெனுந்
தூய தொண்டே
கையிற் போதும் பழமென்ன வாய்க்குமோ வெனவேங்கும்
கடவு ளேறே. (77)

கேள்வன்-கணவன். அயிர்ப்பு-ஐயம். அலகிடுதல்-ஜபித்தல்
பாவனை-தியானம். கையில் போதும் பழம்-உள்ளங்கை நெல்லிக்கனி.

## மதியாகிய மணமகள்

நல்லவழி பாட்டுமுறை பயின்று,மன நலனுடைத்தாய்ப்
புல்லுபணி வுடைமை,யற நெறிபொருந்து மென்மதியைக்
கல்வியறி வுடையவர குணநெறியே கடைப்பிடிக்கும்
மெல்லியலைத் தற்புருட வேட்டருள வேண்டுவனே. (78)

மதி-அறிவு. வரகுணநெறி-மாப்பிள்ளையின் குணமும் ஒழுக்கமும்.
மெல்லியல்-பெண் தற்புருடன்-ஆன்மநாயகன், சிவன்,
புருஷோவைருத்ர : என வேதம் கூறும்

## திருவடியின் மென்மை

எப்போது முனதுபதம் யோகியர்த மிதயமல
ரிணைந்து வாழும்,
தப்போர்கால் புரிசமன்ற னுரவுரத்தைப் பிளந்ததெனில்
தகுமோ சம்போ,
அப்போதை யணையபதந் தனைநினைந்தென் னகமுருகும்
அந்தோ நன்கென்
கைப்போதிற் ருங்குகின்றேன் கட்புலனும் படியருள்க
கடவு ளேறே. (79)

உரஉரத்தை-வலியமார்பினை. போது-மலர்.

## மலையின்மேல் ஆடுவது ஏன்.

அடியனிவன் பிறப்புறுவ னிவன்அகம்கல் லினும்வலிய,
தாள வேண்டி
அடிமலரங் கணும்வைத்தே யாடவுரி யேம்என்ற
வருளி னேலோ,
கடியமலை மீதுமிதித் தனை,பயிற்சி பெற்றனை,மற்
றென்னே கந்தம்
முடிவின்மல ரமளிமனை விடுத்துமலைத்
தலத்தாடன் முயலுமாறே. (80)

கந்தம்-நறுமணம். அமளி-படுக்கை.

## சீவன் முத்தன்

நினதுபத கமலமல ரிடுதல்நினை வது,தொழுதல்,
நினதினிய புகழ்கள் கேட்டல்,
நினதுதிரு வுருவுகண் டிடல்,புகழ்கள் பாடல்எனும்
நியதியாற், பொழுதை யெல்லாம்
நினதுபணி யிற்சிறிது சிறிதாக வாக்கி,மனம்
நின்வயிற் றந்தவ னெவன்
அனகனவ னேசீவன் முத்தன்அன் றேருவுமை
யமர்ந்தபொன் மேனி யரசே (81)

அனகன்—பாவம் இல்லாதவன்.

## திருமாலே சிவனுக்கு இனியன்

கணையாய் விடையாய் ஒருபாகமதாய்க் காதலிதானுகித்
துணையாய் முரணே னமதாய் முழவந் தூக்குந்தொழிலோனுய்
இணையார் அடியிற் கமலக்கண்ணுென் றிட்டான்அரி,மேன்மை
அணைவார் தமிலே அவனிற்பெரியோர் ஆர்ஆரியைநாதா. (82)

கணை—அம்பு; ஏனம்—பன்றி; அரி—திருமால். ஆரியை—அம்பிகை.

## சிறு தெய்வம் சேர வேண்டா

இன்னன்மிகு பிறப்பிறப்பி னுழலுகின்ற இமையவரை
எய்தின் என்னே
நன்மையுறும், வீண்,ஐய மில்லை,பிறப் பிலியமுத
வடிவன் அம்மை
தன்னுருவி லமரீசன் ருளிணைக்கே மனம்வைத்தார்
தாமே பூமேன்
மன்னுபர மானந்த வாழ்க்கையராய்ப் பிறவிநலம்
வாய்ந்தா ராமே. (83)

## புத்தியெனும் பெண்

குணத்தின்மிகு புத்தியெனும் என்மகளைப் பிரமமணங்
கொண்டு, செம்பொன்
வணத்தகவு ரியிருேடு மருகிருந்து பணிசெய்ய,
மன்னு ஞாலம்
எணத்தகுநல் லுறவாள, உண்மையறி வின்பவிருங்
கடலே, என்றும்
தணத்தலின்றி என்னகத்தில் வசித்திருக்க, சிவபவ
தயாள சம்போ. (84)

தணத்தல்—பிரிதல்

## பூசைக்கு வேண்டும் பொருள்பெறல் எப்படி ?

கடல்கடைய வலிமையிலேன், கட்செவிலோ கம்புகுதேன்
அடல்விலங்கு கொல்வனலேன், அம்புலி மோலியையுனக்கிங்
கிடலமுது மலர்சூட்டல் இலங்குமணி யணிபுனைதல்
உடலினெழி லுடையுடுத்த உருற்றுவதற் கென்செய்கேன் (85)

## எப்படி யான் பூசிப்பேன்

பொருந்தினபூ சனைப்பொருள்கள் மிகவெனினும் பூசைஎஙன்
புரிவே னையா,
வருந்தியுநான் பறவைகிடி வடிவாக வல்லேனோ,
வைய மெங்கும்
பொருந்தியுளாய், நின்முடியுந் தளிரடியு நான்காணப்
போதுங் கொல்லோ,
திருந்துபிதா மகன்மாலு முருமாறி முயன்றுமங்தோ
தெரிந்தி லாரே. (86)

எஙன்—எவ்விதம்; கிடி—பன்றி; பிதாமகன்—பிரமன்

## நிந்தாஸ்துதி

ஊணினக் காலமே, யுரகம் பூண்பதே,
நாணினை மறைக்குநல் லாடை தோல்,விடை
காணுறும் ஊர்தியாம் கருதற் பாலதென்,
தாணுவே யீதியுண் தாளி லன்பையே. (87)

உண்—உணவு; ஆலம்—நஞ்சு, உரகம்—பாம்பு; ஊர்தி—வாகனம்.
கருதற்பாலதுஎன்—உன்னிடம் யான் பெறும்படி நினைக்கஉளது யாது.

## யான் எங்ஙனம் உன் பணி செய்வேன்

கட்டினவன் கடற்கணையைக், கையால்வெற் பரசடக்கி
விட்டவனுற் றிசைதோறும் விளங்குமுக முடையவனும்,
சிட்டரென ஆவேனேற் சிவனேயர்ச் சிக்கவுனை
மட்டறுசீர் பாட,நினை வதில்வல்லே னுவேனே. (88)

கடற்கு அணை கட்டியவன்—இராமன்; மால்.
வெற்பு அரசு அடக்கி விட்டவன்—அகத்தியன்.
திசைதோறும் முகம் உடையவன்—பிரமன்.

## எனக்கொரு திருப்பணி பணி

வணங்குவதாற் புகழ்வதான் மனதார நினைவதால்
இணங்குசமா தியினலு மீசாநீ மகிழ்வதிலை,
வணங்குசிலை யாற்சிலையான் முசலத்தால் மகிழ்வதுபோல்,
குணஞ்சிறந்த பணியெதுவோ கூறுதிமேற் கொள்வேனே.(89)

வணங்கு சிலை—வில்; சிலை—கல்; முசலம்—உலக்கை.

உன்னுேடொன் ருய்நிற்கு முயர்யோக விதமறியேன்,
மன்னேநின் புகழ்வாக்கால் வழுத்துவேன்,றிருவுருவை
எந்நேர முந்நினைவேன்; பொதுநீக்கி யீசாநின்
பொன்னேரு மடிமலரே புன்றலைமேற் புனைவேனே. (90)

## தியான பலன்

ஆதிவல்லிருள் நீங்கிற் றவிர்ந்தது
போதம், இன்பம் பெருகிப் பொலிந்ததால்,
ஆதிநின்திருப் பாதம் அகத்துள்வைத்
தேதும் ஏதம்இலேன் இந்துமௌலியே. (91)

ஆதி வல்லிருள்—அவிச்சை; போதம்—ஞானம்; ஏதம்—துன்பம்;
இந்துமௌலி—சந்திரசேகரன்; வைத்து—வைத்ததால்.

## இனிப் பிறப்பு அறுக்க

புன்றலேமேற் பிரமன்முன் பொறிதீயூழ் வழிப்பொருந்து
கின்றபெருமிடி, வருத்தம், யானெனதுன் திருநோக்கால்
பொன்றின,வுன் புகழமுதம் புசிக்கின்றேன், பொன்மலேமின்
தன்றுணையே இனிப்பிறவிச் சாகரத்தி னின்றேற்றே. (92)

பெருமிடி—பெரிய வறுமை; யான் எனது—அகங்காரமும், மமகாரமும், பொன்மலேமின்—பார்வதி, இனி—அடுத்தபடி, இம்மையே, சாகரம்—கடல்,

## பரஞ்சோதியில் தோய்க.

சோமகலே யணிமுடித்துச் சொரிமேகக் கழுத்துடைத்துச்
சாமியெனுந் தகையுடைத்துச் சயிலமகள் துணையுடைத்தாம்
தூமமிலாப் பரஞ்சோதி தோய்ந்தெனது மனமென்றும்
ஏமமுறு பேரின்ப மெய்திமகிழ்ந் திடமாதோ. [93]

சோமகலே—சந்திர கலே! சயிலமகள்—மலேமகள்; தூமம்—புகை;

## பயனுடைக் கரணங்கள்

அதுவேநா வவையேகண் ணவையேகை அவன்பிறந்தோன்,
மதிசூடி ஞேன்பர்க்கன் பெயர்வழுத்து வதுகாண்ப,
புதிதாய மலர்தூவிப் பொன்னடியைப் போற்றுவன
மதுவார்ந்த வண்டேபோன் மனதார நினேப்பவனே. [94]

இது நிரனிறையணி, பர்க்கன்—சிவன். சிவன் பெயர்வழுத்துவதே நா, அவனேக் காண்பனவே கண், அவனேப் பூசிப்பனவே கைகள், அவனே நினேப்பனவே பிறந்தவன்

## மனம் வலிதானுலென்?

மிகமென்மைய வென்னடி, யுன்மனமோ
மிகவன்மைய தென்பது விட்டருளாய்;
நகமின்மகிழ் நாயக னே,கடினம்
மிகுபன்மலே யெங்ஙன மேவுதியே. [95]

வன்மையது—கடினமானது; நகமின்—மலேமகள்;

## மனமதயானையை அடக்குக.

மனமெனு மதகரி தனையுர னெனும்வன்
　　றோட்டி யினான்
நினதருள் வழிவர விழு,பழு தறுநின்
　　பத்திமையாம்
வனைதரு சங்கிலி கொடுதிரு வடியெனும்
　　வன்றறியிற்
புனை,சிவ வுணர்வெனு மெந்திர மொடுதிரி
　　புரகரனே. [96]

உரன் எனும் தோட்டி—அறிவாகிய அங்குசம், தறியில் எந்திரமொடு சங்கிலியிற்புனை என்க. புனை—கட்டுக.

## இதுவும் அது.

திரிகின்ற தீந்தமன மால்யானை மதமிகுந்து
　　சிவனே, யெங்கும்
புரிகின்ற தேகொடுமை; யிதையன்புப் புரிகயிற்றாற்
　　பிணித்தே, மீண்டும்
பிரிவின்றி வயமாக்கி யசையாத நிலைத்தறியிற்
　　பிணித்து வைப்பாய்,
எரிசிந்து சிறுகட் கடாயானை யினையுரித்த
　　எம்பி ரானே. [97]

## கவிதைக் கன்னிகை.

அலங்கார மணைத்துநிறைந் தவள்மென்மைப் பதத்தாள்
அரும்விருத்த நடையினவள், இனியவண்ண மமைந்தாள்
நலங்காணு மறிஞர்புகழ் பவள்சரச குணத்தாள்,
நன்குகுறிக் கொளத்தக்க லக்கணங்கள் நிறைந்தாள்
துலங்குகுண வணிபுனைந்தாள் நயமிகுந்தாள் பொருள்தாம்
தொகுகையள், திருவோங்குஞ் சிறப்பினள்யா னளிக்கும்
குலங்கோணுச் செம்பாவை; யன்பாலேற் றருள்க
குலவரையின் அரசளித்த கொடிபுணர்கற்பகமே [98]

மகளிர் அழகுக்குச் செய்யுள் உவமையாதல்: "ஒள்ளியசீர்த், தீந்தமிழின் தெய்வவடிவாள் திருந்தியசீர்—ஆய்ந்த மடந்தைப் பிராயத்தாள்"
(ஆதியுலா 112)
"பொன்னின் சோதி...செஞ்சொற்கவியின்பம் (கம்ப–மிதிலை")
புனையெழில் வடிவினளோர் பொதுமகட்...இன்றமிழ்ப்பாமாலை
(சீகாளத்தி புராணம்)

## யார் அறிவார் உன் அருள்

முறையோ விதுபர சிவமே, நினதடி முடிகா
ணியவரி பிரமாசீர்
குறைவா மிருகமொ டெகினும் வடிவொடு
குறையா முயல்வொடு மண்விண்ணும்
முறையே திரியவு மரிதா யினையிவன் முன்னே
வந்தனை யெளிதாக,
அறியே னிதுசெய லுடையாய் நினதருள் அறிவா
ரெவர்சுரர் முனிவோரே [99]

காணிய—காணும்பொருட்டு. மிருகம்-பன்றி. எகின் - அன்னப்பறவை. இவன்முன்-என்முன் [இடைமுவமைதி] அறியேன் இதுசெயல் - நன்றி யறிதலாகச் செய்வது இன்னதென்று அறியேன், சுரர் முனிவோர் எவர் அறிவார் என்க.

## புகழ்தல் சாலும்.

புகழ்தலினிச் சாலும்யான் பொய்புகலேன், விரிஞ்சிமுதற்
புலவோ ராய
புகழ்பெறுநின் னன்பர்துதிக் குரியரின்முன் வைத்துனையே
போற்று வார்மெய்ப்
புகழ்பெருமை யாராயிற் பிறரையுமி போற்போக்கிப்
பொன்ரு மேன்மை
திகழ்பவனு யுனைத்தானே யுணர்கின்ருர் சம்போநின்
சீர்த்தி வெல்க [100]

சாலும்—போதும், விரிஞ்சி-பிரமன்

**ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசாரியார் அருளிய**
**சிவானந்த லஹரி முற்றிற்று.**

## வாழ்த்து.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

**—(திருஞான சம்பந்த சுவாமிகள்)**

---

## பிறந்த தின வெளியீடுகள்

1. ஸ்ரீ சிவ கேசாதி பாதாந்த வருணன் ஸ்தோத்திரமும், ஸ்ரீ தச ஸ்லோகி ஸ்தோத்திரமும்.
   (புத்தாண்டு தினம், பிலவங்க ஆண்டு)

2. சிவமஹிம்ந ஸ்தோத்திரம்
   (புத்தாண்டு தினம், கீலக ஆண்டு)

3. சிவானந்த லஹரி
   (புத்தாண்டு தினம், சௌமிய ஆண்டு)

***இந்நூல்கள் கிடைக்குமிடம் :***

1. கவியரசு வித்துவான்
   திரு. கு. நடேசக் கவுண்டர், P. O. L.
   3/84, காந்திபுரம், நான்காவது வீதி,
   ***கோயமுத்தூர் - 12.***

2. திரு K. சென்னியப்ப கவுண்டர்,
   "பத்மாலய நிதி"
   55, காந்திபுரம், எட்டாவது வீதி,
   ***கோயமுத்தூர் - 12.***

வெளியூர் அன்பர்கள் 0—75 பை தபால் தலை அனுப்பி பெற்றுக்கொள்ளவும்

பாரதி அச்சகம், ஒப்பணக்கார வீதி, கோவை. போன் : 23540